உ

வேலுமயிலுந்துணை.

பாண்டிநாட்டில்

செம்பொன்மாரி, சிறுமருதூர்,

மருதவனம், அர்ச்சுனவனம் என்னும்

பெயர்கொண்ட

கண்டதேவியில்

எழுந்தருளிய

முருகக்கடவுள்

# வண்ணச்சந்தமாலை.

இஃது.

மதுரைஜில்லா-தேவகோட்டை

ராமய்யங்காரவர்கள் புத்திரர்

அஷ்டாவதானம்

## வெங்கய்யங்காரவர்களால்

இயற்றப்பட்டு.

ஒடியூர்

கரு-கிர்ஷ்ணஞ்செட்டியாரவர்கள்குமாரர்

**கருப்பஞ்செட்டியாரவர்கள்**

வேண்டுகோளின்படிக்கு.

தஞ்சைமாநகரம்-சதாவதானம்

**சுப்பிரமணியஐயரவர்களது**

சென்னபட்டணம்,

வித்தியாவர்த்தனி அச்சுக்கூ

பதிப்பிக்கப்பட்ட

1880 வரு.

## சாத்துக்கவிகள்.

---

சென்னபட்டணம்.

வித்தியாவிநோதன் அச்சுக்கூடத் தலைவராகிய

தஞ்சை-சதாவதானம்

சுப்பிரமணிய ஐயரவர்கள்

இயற்றிய

நேரிசைவெண்பா

பொன்மாரி பெய்த புரத்திற் பெருங்கருணை
யென்மாரி பெய்முருக னீருதோன்—மின்மாரி
யொண்வளையிற் சந்தச்செய் யுண்மாரிபெய்தனன்
மண்வளையா ரங்கசாமி வான்.

---

மதுரைஜில்லா - வேதியன்குடி

கஸ்தூரிரெங்கய்யங்காரவர்கள்

இயற்றிய

நேரிசைவெண்பா

சேடனிரு நாவாயிற் சேர்ந்தானே தென்மலைமே
லீடுமுனி யுங்குறுகி நின்றானே—கோடலிலாச்
சந்தப்பா வாலரங்க சாமிகண்ட தேவிதனிற்
கந்தப்பா வென்றகவிக் கா.

---

திரிசிரபுரம் மகாவித்வான்

மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் மாணாக்கர்

திருவாரூர்

# சொக்கலிங்கமுதலியாரவர்கள்

இயற்றிய

## விருத்தம்.

செம்பதுமமாதுதின முங்குதிகொட்டை வைநகர்
    செய்யமறை தேர்நிபுணனுங்
கம்பனிவனுமெனக் கவிசொலவதானியாங்
    கருமுகி லரங்கசாமி
யம்புலவனுடக மழைப்பதியில்வாழ்முருக
    ணடிமலர் குறித்துரைத்தான்
கும்பமுனியுங்களி வணைச்சந்தமாலையாய
    கோதிலா நூலைமாதோ.

உ

சிவமயம்.

கண்டதேவி முருகர்

# வண்ணச்சந்தமாலை.

---

## விநாயகர்துதி.

காப்பு-வெண்பா.

சீரார்செம்பொன்மாரிச் செவ்வேள்வண்ணச்சந்தத்
தாரார்பாமாலைதனைச் சாற்றவே—ஏராருந்
தக்கனையடர்த்தசிவ சத்தியுதவக்கயமு
கக்கணபதிக்கடவுள் காப்பு.

## நூல்.

குழிப்பு.

தனனதனதான தத்ததந்த-தனனதனதான தத்ததந்த
தனனதனதான தத்ததந்த தனதான.

கடலுலகமீதினிற்சிறந்த வடிபவளையாளவற்
புதங்கொள் கலைமதியொராறெனப்பொலிந்த முக
மோடே.

கருணைமழையேமிகப்பொழிந்தெ விரவுழுகி
ழாதமட்டவிழ்ந்த கமலமலராமெனப்பிறங்கு விழி
மூவா.

றடன்மருவுசூரனைத்தடிந்த விலைவடிவொள் வேலினைச்சுமந்த வசனுகுலநேசொழிற்றுலங்கு புய மீரா.

றழகுமயிலேறுபொற்சதங்கை யடியிணையுநா னிலத்தினின்ற னடியன்மறவாதிருக்கவென்று மரு ள்வாயே.

வடமணியமேருவொப்பிகந்த தடமுலையும்வே லையொத்தசெங்கண் மகபதியிறலளித்தமங்கை ம ணவாளா.

வனைதுளபமாலைபத்மமங்கை மணிபுனையுமார் பனுற்றநண்பர் மனமலரின்மேவுமச்சுதன்றன் மரு கோனே.

படவரவிஞசிலுச்சிகொண்ட மணிசிதரவேபி டித்தலங்கல் படவிளைவிளைடுசுற்றுதுங்க மயிலோ னே.

பதுமமலராடனக்குகந்த மனைவெனவெனுரு மிக்ககண்ட பழமறைகொள்தேவியிற்சிறந்த பெரு மாளே. (க)

## குழிப்பு.

*தந்ததானன தானனதானன தந்ததானன தானனதானன*
*தந்ததானன தானனதானன தனதானு.*

கொங்குமேவியவாய்மலரோதியர் திங்கள்வா ண்முகமீதினிலேயொளிர் கொன்றைசூடிகைமாளி கர்பார்வையின் மயலாலே.

குன்றியேயவர்வார்முலைதோய்தரு துன்றுமா
சையினல்மயிலேதிகழ் கொஞ்சுசீர்கிளியேயென
வேயனு தினமோதித்.

தங்குபூமியுளோர்கடைவாயிலி னின்றுதாழ்
மையதாகியதோர்பொரு டந்துகாவெனவேகவிபா
டியு நலியாதே.

சங்கமேவியபாலகர்போலருள் கொண்டுதேனி
னுமாரசமேவிய சந்தமாகியபாவினமேசொல வரு
ள்வாயே.

மங்குலோகடலோவெனுமேனியோ டங்கை
யாயிரமோடெழிலேபெற மங்களாகரமாகியதேவி
யர் புடைசூழ.

மங்கிடாதொளிர்மாமணியோடுறை வெங்கண்
வாளரவாமணையேதுயில் வண்டுழாயணிமாலிகைமா
யவன் மருகோனே

கங்குலேகளிறுகியும்வியெனு மைந்துவாளிக
ளேகொடுமாமியர் நன்றவேதுயரேவிடுகாமனை யரு
ளேடார்.

கஞ்சமாமலராள்குடியாகிய செம்பொன்மாரி
யிலேதிகழ்வேலொடு கங்கையாள்தருபாலகனுய்வ
ரு பெருமாளே. (௨)

## தழிப்பு.

தனத்ததந்தன தானனதனதன தனத்ததந்தன தானனதனதன
தனத்ததந்தன தானனதனதன தனதானா.

உருக்கைவென்றிடுதிமனவனிதையர் தருக்கு
மிஞ்சியவாலனநடையினு முவப்புறுஞ்சிமிழ்ணேர்த
ருமுலையினு மயலாலே.

யுளுத்தர்தங்களையேயொருபொருளென நினைத்துநின்றினிதாகியபுகழ்மிக வுரைத்துமென்கலிதீரொனவறுமையி னலியாதே.

மருக்கமிழ்ந்திடுநீடநன்மலரணி திருப்புயங்களிலேபலகவிபுனை மகிழ்ச்சிகொண்டுளமேலவருறவினை மறவாதே.

மன்த்திலன்பொடுதாளிணைமலர்களை நினைக்கவும்பலபோகமுமினிதுற மழைக்கணங்குறமாதுடன்மயின்மிசை வருவாயே.

பொருப்புமஞ்சிடவேமிகுவினைவொடு கறுத்துநின்றிடியேறெனுமுனைகொடு புழைக்கைமஞ்சனமேனிகொள்பலகளி றுணவாகப்.

புலிக்குள்வந்திடுகாலனைநிகர்தரு மொருத்தியென்றுனைதாடகையுரவனை பொடிக்கவன்றெருகோல்விடுகரியவன் மருகோனே.

தருப்பொலிந்திடுசேணகரரசனை வருத்தியங்குளவானவர்தளர்வொடு தவிக்கவென்றிடுசூரனையடர்திகழ் வடிவேலா.

தலத்துளிந்திரலோகமதெனவெழில் மிகுத்துவந்தபொன்மாரியிலுறைதரு தவத்தர்தங்களையாள்குருசரவண பெருமாளே. (௩)

## தாழிப்பு.

தனனதந்த தத்தத்தனந்த தனனதந்த தத்தத்தனந்த
தனனதந்த தத்தத்தனந்த தனதானு.

முருகுதுன்றிமிக்குற்றகங்கு றனையிகழ்ந்துசொ ற்பெற்றிலங்கு முகிலைவென்றுபொற்புற்றிருண்ட குழன்மாஞர்.

முகையினுஞ்சிறப்புற்றடர்ந்து மலையினுந்திறற் பெற்றுயர்ந்த முலைபுயங்கடைக்கப்புணர்ந்து மயலாலே.

உருகிநின்றுலெச்சைக்குடைந்து மணிகள்செ ம்பொனுக்கிச்சைகொண்டுமுணர்விழந்துமட்கிக்கி டந்து நலியாதே.

யுலகிலின்றமிழ்ப்பெற்றகும்ப முனியமைந்த நற்பத்திதந்து முனைவணங்குதற்குச்சிறந்து வருவாயே.

பொருதரங்கமுற்றுப்பொலிந்த கடலைவென்ற ணைக்கட்டிலங்கை பொருதிவென்றியைப்பெற்றவன் றன் மருகோனே.

புகலருந்திறற்பெற்றநந்தி யிறைநலங்கொளப்பு க்குநின்று புனிதமந்திரத்தைப்புகன்ற குருநாதா.

திருகுவெஞ்சினத்தைப்பொருந்து மசுரர்தங்கு லத்தைச்சினந்து செயமமைந்தவொப்பற்றசெந்தில் வருவோனே.

திருமடந்தையுற்றுப்பசும்பொன் மழைபொ
ழிந்திடத்தக்கமஞ்சு நிகழ்புரந்தனிற்கொற்றமிஞ்சு
பெருமாளே. (ச)

## குழிப்பு.

தனதனதனத்தனத் தனந்ததானன தனதனதனத்தனத் தனந்ததானன, தனதனதனத்தனத் தனந்ததானன தனதானா.

மலைகளைநிகர்த்துநிந்துயர்ந்தகோமள முலைது
கிலொளிழ்ந்துவிட்டிலங்கியாடவர் மனநினைவலைத்
திழுத்தியங்கண்மேவிய தெருவூடே.

வருபவர்படத்தையொப்பமைந்தயோனியா பொ
ருடரும்வரைக்குமிக்குகந்தநேசியர் வளமிகுமிரக்க
மற்றவங்கொள்வேசைய ருறவாலே.

புலைவொடுமலர்கணுற்றுயங்கிநோய்பல விளை
தரவயர்ச்சிறற்றளர்ந்துபேதுறு முளமதுகவர்ச்சியி
ற்பொருந்தியேநித முழலாதே.

புலகினிலெவர்க்குமிக்குயர்ந்தபாடல்கள் மொ
ழிகிறபடிக்குநற்பயன்களேயுற வுனதருளளித்தென
க்கிலங்குசீர்மைக டருவாயே.

கொலைபுரியரக்கரிற்சிறந்திராவணன் முடிபொ
டிபடக்கறுத்திலங்கைவாழ்வுகள் கொளவிளையவர்க்
களித்திலங்கிராகவன் மருகோனே.

குறைகடலிடத்துநித்தமர்ந்தமாவினை முறிபட
வடர்த்துமக்ரவுஞ்சமாகிரி குலைதரவிடுத்தடற்பொர்
ருந்துகூரிய விலைவெலா.

அலைபொருசிறைத்தடத்தமைந்ததாமரை மல
ருறையனப்பெடைக்கிசைந்தமாதர்க ளெளிபெறநடி
த்திடத்தரும்பொன்மாரியி லுறைவோனே.
யடியவரிடுக்கணைக்கடிந்துசீரிய பொருள்பலவ
ளித்துநற்றவங்களேயுற வருள்புரிகுறத்தியைப்பணி
ந்துவாழ்தரு பெருமாளே. (௬)

## குழிப்பு.

தனத்தத்தத்தன தந்ததானன தனத்தத்தத்தன தந்ததானன
தனத்தத்தத்தன தந்ததானன தனதானா.

சகத்திற்சிற்சிலவம்பர்நிதெறி படைத்துத்தூர்
ச்சனரொன்றுபோகொடு தவத்துச்சற்சனர்துன்ப
மேபெறு வகைநாடித்.

தமக்குப்பிட்டியசெம்பொன்யாவையு மழித்து
க்கைப்பசையின்றியேதுயர் தரித்துக்கற்புளமங்கை
மார்களை வசைபேசி.

இருத்திற்பெற்றிநன்றியாவையும் விடுத்துச்
சொர்க்கமதங்கிலாமறு மிரப்புற்றுத்திரிகின்றநீய
னை மதியாதே.

யினித்துச்சொற்புகழ்கின்றசீர்கவி புனைத்துப்
பொற்புறுமுன்றன்மாணடி யிருக்கப்பெற்றுயான்
பர்போலருள் புரிவாயே;

மகத்துக்குத்தலைவன்றன்மாமுடி கொடுத்துக்க
ற்பகவென்றுசூரனை மடித்துச்சொற்பெறுசெந்தின்
மாநகர் வருவோனே.

மழைக்கட்பொற்றொடியொன்றுசிதையி னெ ழிற்குத்தக்கவனென்றுசுடறவில் வளைத்திட்டற்புத மிஞ்சிராகவன் மருகோனே.

நகத்துட்பற்பலவிந்தையாடல்க ணடித்துப் பொற்குறநங்கையாளெழி லலத்துக்குப்பணிகின்ற பேர்நசை யுடையோனே.

நவிக்குக்கட்குறையென்றுநீள்விழி படைத்து ச் சொற்கனிமங்கைமார்பலர் நயபுற்றுப்பொலிகண் டதேவிகொள் பெருமாளே. (கா)

குழிப்பு.

தன்தனதனதன தந்ததானன தனதனதனதன தந்ததானன தனதனதனதன தந்ததானன தனதான.

குடமுனிதமிழ்பெறவென்றுகூறிய கருணையு மொருகுகைநின்றுகூவிய குணமிகுபுலவன்முனின் றசீர்மையு மறியாதே.

குணைகடலுலகினில்வன்கணோர்பல ருனதடியவர் புகழ்கண்டியாதொரு குறைசொலிநகைபலகொண் டுசீறுவர் மிடியாலே.

மடமையொடவரெதிர்நின்றுசீரிய கவிசொலி யரசுசெய்துங்கனேயென மனமகிழ்தரவுரைதந்து பேசியுமொருகாசாம்.

வரையிலுமுதவுதலின்றியேயுயிர் விலகியவுட லெனநின்றுநோயெனும் வலைதனிலுழல்வதுநன்ற தோவருள் புரிவாயே.

கடமழைபொழிதருசெங்கண்வாரண முகனுஞ் செமர்புரிகின்றவேலொடு, கவினிலகியவுயர்துங்க வாரண முடையோனே.

கவுசலைதரவெழின்மைந்தனுகியு மசுரர்கள்குல முழுதுண்டகார்முக கரதலனெனுநரசிங்கமானவன் மருகோனே.

அடவியிலொருசொடி நின்றருழலி னைதிரை முதிர்தருகின்றதோர்பெரி யவனொனமணமுறவந்து கார்மயி லமர்வோனே.

யமையிமையவருலகொன்றுசோலையி னிலவு மிழ்தளவலர்கண்டதேவியி லடியவரருள்பெறவந் துவாழ்தரு பெருமாளே. (எ)

## துழிப்பு.

தனனதனதந்த தனனதனதந்த
தனனதனதந்த தனதானு.

கனகவளைவென்று முடிதனையெறிந்து கமலமு கையம்பு படமோதிக், கலசமதையங்கி தனில்விழு முனிந்து கதிர்மணிவடங்கொள் முலைமானுர்.

வனமனாயொதுங்க மினிரரிநெடுங்கண் வலைத னில்விழுந்து நலியாதே, வளமிகுதரங்கவுலகைமயி ல்கொண்டு வலம்வருபதங்க ளருள்வாயே.

சனகனருள்கண்டு மொழியெழினயந்து தனு வைமுறிதுங்கன் மருகோனே, சதுமுகனையன்று சி றைபுகவெகுண்டு தயைபுரிகுழந்தை வடிவேலா.

அனநடைபயின்று கொளுமெழின்மிகுந்த வரி வையெறிந்த மலர்மாலை, அளிகுலவுமம்பொன் மழைநனிபொழிந்த வணிநகருறைந்த பெருமாளே.()

குழிப்பு.

தனனதந்ததான தனனதந்ததான
தனனதந்ததான தனதான.

நளிதரங்கவேலை புலமில்வன்கணாளர் நனியிகழ்ந்துபேச வலாமேலே, நவரசங்களோடு பொருளயங்கள்மேவி நவையகன்றதூய கவிபாடி.

ஒளியிழந்துநாண மிகவகன்றுதேய வுணர்விழந்துவீணி லலையாதே, உனதுநண்பர்மேய சபையிருந்துபாட வுளமுவந்துநாளும் வருவாயே.

தளிரிலங்குமேனி யலர்மடந்தைமார்பு தனிலணிந்தமாயன் மருகோனே, தருமனன்றுவீழ முனிவுகொண்டபாதர் தருகுழந்தையான வடிவேலா.

களிமதங்கொள்தோலி னிளையமஞ்சுலாவு கரைவிளங்குசோலை தனில்மாதர்; கனியெனுஞ்சொன்மேவி நிலவுகண்டதேவி கவினவந்தசீர்கொள் பெருமாளே, (கூ)

குழிப்பு.

தானதனதந்ததன தானதனதந்ததன
தானதனதந்ததன தனதான.

சேலெனமிளிர்ந்துகடலாலமதைவென்றுமிரு தீவிரம்விளங்குநெடு விழியாலே.

சேணுறநிவந்துவளர் மேருவரையென்றுரைசெய் சீர்மணிவடங்குலவு முலையாலே.

மாலததினின்றவர்கள் தோள்புணர்வைந் துக்க
மாயையினலேந்துநனி திரியாதே.
மாணிலகுமுன்றனருள் மேவியுயர்நின்றனை
மாலேபுனையுந்திறமை யருள்வாயே.
காலனையுதைந்துகடை யூரதனிலன்பனெதிர்
காணவிடைவந்தசிவ னருள்சேயே.
காவிரியரங்கநகர் மேவியரவின்கண்வளர் கார்
முகிலுகந்தவெழின் மருகோனே.
வாலனடநருலவு சீர்மையொடுசெம்பொனெ
ளி மாரிபொழிகின்றநக ருறைவோனே.
வாகைமயில்நின்றடியர் பாடுதுதிகொண்டுமத
வாரணமுகன்பின்வரு பெருமாளே. (க0)

குழிப்பு.

தனனதானதத் தானனதனதன தனனதானதத் தானனதனதன
தனனதானதத் தானனதனதன தனதானா.

கொடியபாதகத்தோருறும்வறுமைகள் மருவி
மானம்விட்டேயெனதுடலுயிர் குறையைவினமுற்
றேபொருளிலகிய அறிவோர்மேல்.
குலவுதேனுமட்டார்தருவிருநிதி யுடையகோ
வெனப்பாடியுமவர்மனை குறுகவோபடைத்தாயுன
தருடனை யறியேனே.
படியுளோர்கடத்தேறவுமருணிறை குழவியாகி
நற்கீரனையொருகுகை பழுதுறுமலுற்றுயெனை மரு
வுத லரிதாமோ.

பழமையானசொற்றேர்தருபுலவர்கள் குழு வைநாடிநட்பாகவுமுனதடி பணியுமாறுபெட்பார்ம யின்மிசைமுனம் வருவாயே.

அடியினுலெழிற்பூதலமுழுதொரு நொடியி லேயளப்பானெளியவர்க்குறை யதனையேதுடைத்தா ள்பவனிடையர்கள் மனைதோறும்.

அளைமைவாயில்வைத்தேநுகர்மதலையி னுருவி னுல்மிகுத்தோனனையுரலோடு மணையவேபிணித்தா ர்தாநகுமரி மருகோனே.

கடிகொள்சோலையிற்பாண்முரலளிதுதை மல ரின்வார்மதுப்பாய்தலின்வளமிகு கழனிமேவுநற்சா லிகளிமையவ ருலகேயா.

கமலமாதினுத்சோர்மனையெனவெழி லவிர் பொன்மாரியிற்றேசுமிழ்தரமத கருணைவாரணத்தா னனுடன்வரு பெருமாளே. (கக)

துழிப்பு.

தனனதனதன தனனதனதன தனனதனதன தந்ததானன தத்தத்தத்தன தத்தத்தத்தன தத்தத்தத்தன தத்தத்தத்தன தனதானு.

இருளுமொலிகடல் மழையுமலமர விலகுகுழல் குளி ரிந்துநேர்முக மிக்குக்கொக்கவி னித்துத்தத் தையி னத்தைச்சக்கரை யைப்பெற்றுக்குளி ரமுத மொழுகிய மொழியுமயிலையு மளியுநிகரென வம்பு போல்விழி யப்புக்குட்க்குமி ழொத்துச்செப்பைநி கர்த்துக்கச்சி னிருக்கப்பெற்றுய ரினியமணிவட மு லவியிளைஞர்கள் மனதுகவர்தரு மின்பமேவியு மெ

ட்டுத்திக்கினி டத்துற்றுப்பொலி வெற்பொத்துச்
செறி வட்டக்குத்திள முலேமேவி.

யிரதமருவிய தெருவிலொயிலொடு திரியுமிசை
தவழின்சொலார்பல ரிட்டத்துப்படி தித்திக்கத்தகு
முத்தத்தைக்கொடு துப்புக்கொத்தவி ரிதழினுருசு
வைபருகிமதனுறை யிடமதனில்வெகு விங்கிதாகர
மிக்கத்துய்த்திட விட்டுக்கட்டிய ணைத்துப்பற்குறி யி
ட்டுப்பொய்த்துயி லிலகவிருவிழி செருகமுகமதி
வெயர்வுமிகுதர வெஞ்சியேயுமை யெய்த்துத்திக்கி
யு மைத்துப்புட்குர லிட்டுச்சத்தமெ முப்பிக்கொக்
கொக விதயாலே.

மருவியவருறு நிதியமுழுவது மொழியும்வகை
யொடு வஞ்சமாய்நகை வைத்துப்பட்டினு டைக்கெ
ட்டுப்பவன் முத்துச்சுட்டித னக்கெட்டுப்பவ னி
ழைகள்பலபல விழையுமவைகளு மினிதினுதவு
வை யென்றன்மேனியு னக்குத்தத்தம ளித்துக்கிட்
டியி ருக்கப்பெற்றவெ னக்குச்சற்றையு மனதுமினி
யொரு வரையும்விழையவு மகிழ்தல்புரிவன வன்றி
தாணேயெ னச்சொற்றுப்பொருள் தெட்டிக்கைப்ப
சை யற்றுக்கெட்டிட் விட்டுச்சற்றினி யிவளுலே.

வகையுமிலேயொரு சலியினளவென வெளியில்
விடுபவர் வந்தவேறொரு வர்க்குச்சித்தம ஞமத்து
ச்சத்திய மற்றுச்சொற்றவ றுற்றுப்பொய்ப்பவர்
கொடியசெயல்புரி கணிகைமகளிர்க ளுறவினசைப

ல கொண்டுபூமியி டத்துச்சிற்சில வற்பற்குங்கவிசெ
ப்பிக்கொற்றம்வி டுத்துச்சர்ச்சனர் வதியுமவையது
புகுதவிலகியும் வறுமைபிணிதர வங்கிமேவும ரக்கு
க்கொத்தம னத்திற்றுக்கமி குத்துப்பொற்புவி டு
துக்கெட்டுட லழிவேனோ.

திருவுமொளிதிகழ் மணியுமணிதரு திறல்கொ
ளாரமொடு செங்கைமாகரி செற்றுச்சக்கர நத்தும
கைத்தலம் வைத்துக்கட்கமு முற்றுந்திட்பவில்
கதையொடுபெர்வுறு படைகள்கொடுசமர் பொருது
பகைஞர்கள் கன்றிபோயுயிர் விட்டுந்தெற்கினி டத்
துப்புக்கிட வெற்றிச்சத்தமொ லித்துக்கற்பொரு
திணிபபுயமுறு கனகனுடலது கிழியவகிர்நர சிங்
கமாய்வரு சிட்டர்க்குப்பத முய்த்துக்கொட்புறு ம
த்திக்குக்கிர்பை வைத்துப்பற்பக லிணாதேடித்.

திணாசெய்மடுவினி லுருகுபசியொடு நெடிதுப
கல்திரி செங்கராமெய்தி கைத்துந்துய்த்திட விச்
சித்துக்கவர் துப்பைக்கைத்திட விட்டுக்கைக்கரி து
யரமொழிதர வருள்செய்நெடியவ னவையினொரு
கொடி துன்றுமானம ழிக்கத்துட்டர்நெ ருக்கிப்
பொற்றுகில் பற்றிக்கட்டுநெ கிழ்க்கக்கற்பினள் சிறி
யர்செயலுள மருவிஹரிஹரி திருவினிறையவ வெ
ன்றுமர்துதி செப்பிக்கைத்தல முச்சிக்குட்புக வை
க்கச்சித்திமி னித்துப்புக்கவன் மருகோனே.

தருவினறுநிழ லுறையுமமரர்க டலைவணெடு
சமர் தந்தசூரனி றக்கத்தற்பர னெற்றிச்சக்கிடை
யுற்றுச்சத்திவி டுக்கப்பெற்றவ னிருவர்முனிவர்க
ள் பரவியடியிணை தொழுகவரிமிரு தஙகவோசை
மி சைக்கத்துத்தியொ லிக்கச்சிற்பரை சித்தத்திற்க
ளி துய்த்துப்பெட்புற தகுததரிகிட திமிதிமிதிமிதிமி
ஜணுதஜணுஜணு தந்ததோதிமி தத்தத்தச்சணமிக்
கப்பொற்சபை நிர்த்தற்குப்ரண வத்தைச்சொற்ற
ருள் குருநாதா.

தளவின்முகையவிழ் பொழிலின்மதுமழை
பெருகிவயலிடை தங்குசாலிக ளைறத்துச்சொற்க
நி லத் ற்புக்கவ ருக்கைக்கொக்கின்ம ரத்திற்செரு
க்குதிர் கனிகள்கவியிடர் மறுகினுயர்மணி யொளி
செய்வளமிகு கண்டதேவி நகர்க்குட்பத்தர் நு திக்
கப்பொற்பி யுற்றுக்கற்புமி குத்துச்சொற்கனி தக
மைநிறைகுற மகளினடிதொழு தரியபுகழ்கொடு ச
ங்கமார்புல வர்க்குத்தர்க்கமொ ழிக்கச்செட்டிகு ல
த்திற்றக்கசி றப்புற்றுப்பொலி பெருமாளே. (௰௨)

தழிப்பு.

**தனதானன தந்தனதானன தனதானன தந்தனதானன**
**தனதானன தந்தனதானன தனதானு.**

அனையோயெர்தந்தையுமீனமில் மனையாளெ
ழின்மைந்தருமூருற வனைவோர்களுநைந்திருபாலி
னு மழுநோயா.

ரகமாகியுனமம்பொறிசேர்தரு முடல்மேவிய வென்றனதாருயி ரதையேகொளவந்தகனூர்மிகு வி னைவாயே.

முனேயேபுரிதண்டத்ருசூலமு முறவேகருவெ ம்பகடேறியு முனிவாய்வருகின்றதொர்நாளது த னைஞடி.

முகினேர்சிறையஞ்சிகிமீதினி லிருதேவியர்கொ ண்டினிதாகியு மொளிர்வேலொடுகந்தவெனேர்தனி ல் வருவாயே.

கனேயார்கலிவந்திடவோர்குசை தனிலேதவந ன்கமைசிரிய கருமாமுகிலென்றவிராகவன் மருகோ னே.

கமுதாடவுமஞ்குறைகூளிகள் மிகநாடவும்வெம் பசிமேவிய கனவோரிகள்துன்றிடமாவினே முனி வோனே.

சினேமேவியசெங்கனிவார்தரு நறையோடிநல ந்திகழ்நாறுகள் சிதையாதுவளர்ந்திடுமேர்பெறு நக ராகித்.

தெருளாளர்நிறைந்துலகேழினும் வளமேபெ று துங்கபொன்மாரிகொள் திறலார்பல குன்றுகளே திகழ் பெருமாளே. (கரு)

## தொழிப்பு.

**தனதனதானன தனதனதானன**

**தனதனதானன தனதானு.**

குருபரவேலவ பரசிவனாருள் குககுமராவென

மொழியாதே .

குலவுசகோரமு மொழிதரவேவளர் குவிமுலைமாதர் கள் வலையாலே
உருகியும்நோய்பல விளைதரவேயுட லுறைதருமாருயிர் மிகவாடி
உலகுழைதியவர் மனைகளிலேபொரு ளுதவெனவே சொலி நலியேனோ
அருணையிலோர்கிளி பகர்கவியாலுள வதிசயமேவிய முருகோனே
யலர்மகள்மேவிய மணிதிகழ்மார்பின னலைகடலேதுயி லெழின்மாயோன்
மருகஙிர்பாகர வொளிதிகழ்மாளிகை மருவியயாதர்கண் முகநேரா
மரைமலர்வாவிகொள் சிறுமருதூர்தனின் மயின்மிசையேறிய பெருமாளே. (கச)

## தழிப்பு.

*தனத்ததந்தன தந்ததானன தனத்ததந்தன தந்ததானன*
*தனத்ததந்தன தந்ததானன தனதானா.*

மருக்கமழ்ந்திருடின்றுமோதியர் பொருப்பைவென்றெருகம்பமாவிரு மருப்பினுந்திகழ்கொங்கையார்களின் மயலாலே

மறுக்கமுண்டவரின்பமேபெறு கருத்துமிஞ்சியவம்பராயுயர் வளப்பமின்றிடுசெம்பொனீமவர் மனைதோறு

நெருப்பினின்றுழல்கின்றதோர்புழு வெனக்கு, ளைந்துயிர்போன்றவேகவி நிகழ்த்திநின்றிடலின்றி யேமிகு கலிகோயே

நிலத்தின்வென்றுயர்கின்றகாலமு மெனக்குவந்திடலென்றரோவரு ளைத்துமன்புடன்வென்றி மாமயில் வருவாயே.

விருத்தனென்றுருகொம்பனுள்மனை தனிற்புகுந்தெழில்மிஞ்சுகாளையு வியப்புடன்றிகழ்மைந்தனு னவ னருள்சேயே

வெலற்கருந்திறல்கொண்டசீர்கன கனைப்பிளந்தொருசிங்கமாய்முரண் விலைப்பொருந்தியபுங்காகவன் மருகோனே

திருப்பொலிந்திடுமெங்கைமார்கண வனைப்புணர்ந்திடலொன்றியுடுதநினைத்தணிந்திடுதுங்கவாயிறைகளைவிசுக்

தெருக்கிடந்தொளிர்செம்பொன்மாரிபெய் புகழ்ச்சியொன்றியகண்டதேவியொள் சிறைச்சிகண்டியிலென்றுமேவிய பெருமாளே. (கரு)

தழிப்பு.

தனதனதத்தன தனதனதத்தன
தனதனதத்தன தனதானு.

உலகதனிற்றுயர்தருபொருணித்திய முளதெனுமற்
பர்பு னெறியாலே
உனதருள்பெற்றுயரடியவரைத்தொழ வுளமதனிற்
களி யடையாதே

இலகுவரைத்தனவிலைகொள்பரத்தையரிணையடியை
த்தொழு ததனுலே
இகபரமற்றவர்மனைதொறுநற்கவி யிசையொடுசெப்
பியு நலிவேனே
குலவுதினைக்கிளிகடியுமெழிற்சிறு குறமகளைப்பணி
புருகேசா
குரைகடலிற்பணியணையதனிற்றுயில் கொளுநெடிதுமரிபெ
ட்புறு மருகோனே
அலகில்வளைக்குலமுதவுமணித்திர ளலைகள்கொழித்
திட நெடுவாளை
யவிர்ககனந்துகள்மருதவனத்துறை யடியவருக்கரு
ள் பெருமாளே. (கக)

தாழிப்பு.

தனதானன தானனதானன தனதானன தானனதானன
தனதானன தானனதானன தனதானு.

மழையோகடலோவளியோவெனு மிருளோதி
யும்வானுலகார்தரு மதிநேர்முகமீதினிலேயொளி
விழியாலே
வருமாட்டவராருயிரேகொளும் விலைமாதர்கள்
யோனியிலேபுகு மறிவீனர்களாகியதீயவர் மனை
தோறும்
விழைவாய்மிகவேபொருள்தாவென வுயர்சீர்க
விபாடுதலாலவர் வெறும்வீணனிபோவெனவேசொ
லும் வசையாலே

விதியால்வருதீவினையிதென மன்றேபடுநீயெ
னவாடியுன் வியன்மாணடியேயபணியாநுட னவி
வேனே

உறைநேர்விழிசேர்தருசீதையி னெழின்மாநல
மேபெறுமாசையி லெருகார்முகமேவலோராகவன் ம
ருகோனே

உமையாள்தருபாலகனுகிய குமராவமராபதிபா
வல வனையாதரியாதவர்திவினை யொழியானே

கழையானவிலேலதொடுமாமத னனையாரிடமுடி
யமாதர்கள் கனோமாமலர்மாலையின்வார்தரு நறை
யேயாடிக்

கயமேரிகளோநிறைசீர்திகழ் மருநூர்தனிலேம
யின்மீதமர் கருணைகாரணியவேல்புனை பெருமாளே.

திருப்புகழ்.

தனதனதானன தத்தனதந்தன தனதனதானன தத்தனதந்தன
தனதனதானன தத்தனதந்தன தனதான

கரியிருகோடெனமுத்துவடங்கிகழ் முலைவிலை
கூறிடுசித்தமிலங்கிய கணிகையர்மால்வலைபட்டுழல்
கின்றது தவிராதே

கனமரியாதைகள்விட்டுயிர்நந்திய மீபொருளா
ளரிடத்துநலந்திகழ் கவிபலவாகவுரைப்பினுமிங்கித
மரியூரதே

பரிவிலராகியதுட்டரிடந்தனி லுரிமையினல்
மிகவைத்திடுநெஞ்சினர் பழிபலவாகவிளைத்திடுவஞ்
சனை யணுகாதே

பலபெரியோர்களுமெச்சிடவந்தொரு திருவிளையாடனடத்திவரந்தருபதவிளைவீடுபெறக்கிர்பைநெஞ்சினி னினைவாயே

வரிதிகழோர்வில்வளைத்துநிலந்தரு வனிதையைமேவமணத்திடுபுங்கவன் வனமுறுயோகியர்கட்கருடந்தவன் மருகோனே

வளமலிமாமதுரைப்பதிதங்கிய தனபதியாகவுருக்கொடுவந்தவை மருவியநாளில்வழக்குரைசங்கரனருள்பாலா

அரிபரியாகவுகைத்திடுபைங்கழை மதன்விடுவாளிதுளைக்கருநெஞ்சொடு மமைமுனிவோர்கள்கருத்திலிலங்கிய முருகோனே

அலர்விரிசோலைபுடைக்கணெருங்கிய சிறுமருதூரினிருத்தமிலங்கிடு மவிர்மயிலேறிநடத்திவருந்திகழ் பெருமாளே. (கஅ)

## குழிப்பு.

தானனதந்ததான தானனதந்ததான
தானனதந்ததான தனதான

வானடிலங்குதேவ ரோடாதமைந்துவாழ மாசூரை
வென்றுகாவல் புரிவோனே
வாதாடியன்றேர்பாலை யூடேயெதிர்ந்தவாய்மைவா
டாதவன்பனேரில் வருவோனே
காமவிதங்களான போகாதியின்பமேவி நடோரு
முன்றனும மறவாதே

நாகேரமைந்தநூவி மாயூரநின்றுநேரில் நாயேனையா
ளவிங்று வருவாயே
மாறுநிவந்தநிய மாரீசனன்றுவிய மாவாளிகொண்
டநூயன் மருகோனே
மாவேல்புனைந்தசில கோலாகலங்கொள்பால வாதா
டுமிண்டர்கால முருகோனே
தேனூரலங்கன்மாலை யாரோநிறங்கைமார்கள் தேசே
யுமம்பொன்மேனி நிகராயே
தேமாவிளங்குசோலை யேமேவுகண்டதேவி சேர்நா
யகந்தனை பெருமானே. (கஅ)

தூழிப்பு.

தனத்தத்தந்தன தந்ததானன தனத்தத்தந்தன தந்ததானன
தனத்தத்தந்தன தந்ததானன தனதானா.

கருப்பெற்றைந்திருநிங்களாய்வயி றிடத்துட்
டங்கியுவிந்துசிருல கதிற்கற்கண்டெனுமுன்றனுமம
துமையாதே

கனத்தூதத்தண்டலைவண்டையேநிகர் கதுப்பை
க்கெண்டையைநஞ்சைநேர்புகல் கணைப்பொற்கும்
பமதென்றவேர்முலை யுடையோர்பால்

விருப்புற்றங்கசனேந்துவாளிகள் விடுக்கத்தெ
ன்றலும்வந்தெனுருயிர் விலக்கச்சஞ்சலமொன்றிநா
டொறு மெலியாதே

"வெயிற்பொற்பைஞ்சிறைதுன்றுசீர்மயி லுகை
த்துச்செங்கதிர்கண்டுவாயவிழ் விரைக்கட்கஞ்சமும
ஞ்சுசீரடி தருவாயே

செருப்புக்குந்திறல்தங்குமோர்தகர் நடத்திச்
செந்திலின்வந்துதூயவர் செழிக்கப்பொங்கருடந்து
வாழ்வுறு குமரேசா
சிரத்தைக்கொன்றையையங்கமாறணி பவர்க்கு
ச்செஞ்சொலிலிங்குமூாமறை தெரித்துப்புங்கமமை
ந்ததேவர்க டலைவோனே
தருக்குற்றிங்கிதமின்றியேவசை யுரைத்துக்கம்
பமமைந்துசீறிய தயித்யற்கொன்றொருசிங்கமானவ
ன் மருகோனே
தடத்திற்சங்குகடந்தமாமணி யிமைக்கச்செங்
குமுதங்கள்வாய்விரி தரச்சொற்றங்குபர்கண்டதே
விகொள் பெருமானே. (உ0)

தூழிப்பு.

தனனதனதந்ததான தனனதனதந்ததான
தனனதனதந்ததான தனதானு.

சிகரமொளிர்செம்பொன்மேரு வரையையொருசெ
ண்டின்மோது திறலுடையகந்தவாறு முகநாதா
சிமிழனையகொங்கைநாறு குமிழைநிகருந்திமேய சி
றுமியைமணந்தசீர்கொண் முருகேசா
தகரமணிகொண்டலோதி வனிதையர்களம்புகாவி
தனையுமுனிகின்றவால விழியாலே
தளர்வொடுமெலிந்துமூடர்களைமிகநயந்துமேன்மை
தனையுமறவிண்டுநாளு முழல்வேனை
மகரமுகள்சிந்துவேக வொருபகழியன்றுவீசு மண
மிலகுதண்டிழாயன் மருகோனே

மதுரைநகர்வந்துதீய வமணர்களொருங்குவீய வரை
பதிகமங்கிநீரில் விடுவோனே
சகரர்தொடுதுங்கவாரி யரவமுமடங்கவேழு சலதர
முமஞ்சநாளு முலையாதே
தனியொலியியங்கண்மேவி யெழிலிலகுசெம்பொன்
மாரி தனிலொருசிகண்டியேறு பெருமாளே.()

## குழிப்பு.

தானதானன தந்தனதானன தானதானன தந்தனதானன
தானதானன தந்தனதானன தனதானு.

ஆனைமாமுகவைங்கரனேடம ராடியேயுலகங்
களையோர்நொடி யாகவேவருகின்றகுருலய முரு
கோனே

யாசிலாதொளிரன்பருளானவ னேகுகாகுறம
ங்கையிநாயக வானவேர்நதிதங்கிடுபாலக வெழி
லோனே

மானநேரலவென்றெருகானிடை யோடவே
முனிவுண்டொளிர்வேல்விழி மாதரார்மயலொன்றி
யெநாடொறு மெலிவாலே

மாகமேவியவைந்தருநாயக னேமியானெனவ
ண்டரையேகவி மாலபாடியுவெங்கலிநோய்கொடு
திரிவேனே

சோனைமாரிபொழிந்தவநாளொரு சேயசீர்வ
ரையங்குடையாயெடு தூயனுயர்மகிழ்ந்திடுகோவல
ன் மருகோனே

மீனைநேர்கண்ணிளங்கொடிபோல்பவள் பாகமார்
தருநஞ்சமரேர்களன் மேவிவாழவிர்செம்பொனின்
மாரியி னுறைவோனே

மேன்மையாகியதண்டமிழ்நாவலர் நேயனே
யெயில்பொங்குகலாமயின் மேடமேறிவருங்குமரா
வயர் பெருமாளே. (௨௨)

குழிப்பு.

தனனதன தனனதன தனதான தத்ததன தனனதன தன்னத
னதனதான தத்ததன, தனனதன தனனதன தனதானதத்தத
ன தனதானா.

குமரிதிரிபுரைபுனிதை குழையோடெதிர்த்த
விழி யுடையபயிரவிகௌரி யுமையாளுலப்பிலவள்
குலவரையின்மகளுதவு குகனேகுறத்திபுணர் கும
ரேசா,

குரைகடலினிலையின்விழி துயில்கோமளப்புய
வி னிறமுடையனடியவர்க டனைநீணிலத்திலொரு
குறையுமிலையெனவருள்செய் குணமேமிகத்தவரி ம
ருகோனே,

நமனைமுனிவுடனுதையு நவைதீர்விடைப்புனி
த னுணரவருமறைமொழியு மவனேநகத்தைநிகர் ந
கைசெய்மணிவடமணியு முலைநால்வர்சுற்றிவரு தெ
ருளூடே,

நணுகிவிலைபகருமவர் நலமேகெடுத்திளைஞ ர
வர்களையுமலையவிடு மிழிவார்பரத்தையர்க ணசையு
டையமிடியனையு னடியேவழுத்தவரு டருவாயே

சமரகளமுகவிஜய தரவேலெடுத்தசுர குடலை
நரிகழுகுகொடி யுணவேகொடுத்தமரர் தனியரசுபுரி
யவருடருவோய்திருத்தணியி லுறைவோனே,
சதுமுகனுடனெவருமுயர் ஜனகாதியர்க்கும்வ
ரு கவலையொழிதருமுருக கதியேகொடுக்குமகல் ச
ரவணமதெனுநதியில் வருவோய்தகட்டிலைய வடி
வேலா,
அமரருலகதனையடர் தருசீர்மிகுத்தபொழி வி
ணரிமுழுகியநறையு மினிதாயமுக்கனியி னமுதுமு
யர்பழனமுள பயிரோவளர்க்கும்வள மதகுலெ,
யளவினிறைபெருகுசிறு மருதூர்தனிற்புனித ர
கமகிழவவரவர்கண் மனதானினைத்தபடி யருளுதவு
மினியதக ரிவர்வோய்சகத்தினிறை பெருமானே. ()

துழிப்பு.

தத்தன தனத்ததன தத்தன தனத்ததன
தத்தன தனத்ததன தனதானு.

முத்திரைசிகர்த்தெயிறு துப்பதனையொத்தவித
ழ் முக்கனிரசத்தனைய மொழியாலே,
முத்தியைநினைத்ததவ வித்தகருநச்சவரு மொா
க்குளவனத்தில்விடு முலையாலே,
மத்தினிடமுற்றதயி ரொத்துயர்பதைக்கமுனி
மச்சமிதெனக்கருதும் விழியாலே,
மற்குடமனத்தெனை வளைத்திழுபரத்தையர் வ
லைக்குள்விழுபுத்தியற வருள்வாயே,

கொத்திலகுசெச்சைமலர் மற்பொருபுயத்தில்
ணி கொற்றவொள்தகட்டிலைய வடிவேலா,
கொட்புறுதிறத்தமர ணைக்கெட நினைத்தடரு
கொக்கினைவதைத்தவலி யுடையோனே,
அத்திமுனிக்கிவரு சக்கரவெழிற்படையன
ற்புதமிகுத்தவெழின் மருகோனே,
அக்கரனிடத்துவளர் சிற்பரையிருக்குமுய ரச்
சுனவனத்திலகு பெருமாளே, (உச)

குழிப்பு.

தனதந்தன தானனதானன தனதந்தன தானனதானன
தனதந்தன தானனதானன தனதானு.

தினமுஞ்சிசிவாகனமேறிய குகனன்பர்கள் தீவி
னையோயுற் திருவின்பயனைகொளவேவர மருள்வோ
னே,
திரையுந்தியகார்கடல்சூழ்தரு முலகந்தனிலே
யுலையேபுகழ் சிறியன்கலிநோய்கொடியார்வையர் ந
சையாலே,
கனமிஞ்சியராகவனேகரி வருமிந்திரனே சி
வனேயொரு கமலந்திகழ்மாமறையோய்மத னெழி
லோனே,
கருதும்பொருளீகுவைநீயென நரர்தங்கியசீர்
மனையேபுகு கவிநன்குரைதீயவனேயென்றிர் வருவா
யே,
சனகன்றவமேன்மையினால்வரு மொருபைங்கி
ளிநேர்தருசானகி தனைவஞ்சித்தநோயெனும்ராவண
னுயிரோடே,

குழிப்பு.

தந்ததானன தந்ததானன தந்ததானன தனதானா.

வண்டறுமலர் துன்றுமோதியர் வஞ்சமார்நெடு விழியாலே,

வஞ்சிபோலிடை நைந்துபோலனா வம்பினாலணி முலையாலே,

கண்டுவாடவர் சிந்தைநோய்கொடு கன்றவேமயல் தருமானார்,

சஞ்சநேர்சொனி தம்பமேவிழு கங்குனேர்மய லொழிவேனோ,

அண்டமாயிர நின்றகோலின னஞ்சவேயடர் நெடுவேலா,

அந்தமாதியில் கந்தனேதொழு மன்பர்தீவினை முனிவோனே,

சண்டன்வீதர வன்றுசீறிய சம்புவானவ னருள்சேயே,

சந்தமேவிய கண்டதேவியர் தஞ்சமாகிய பெருமாளே. (உஅ)

குழிப்பு.

தனதன்தானன தனதனதானன
தனதனதானன தனதானா.

அருணையினோர்கிளி நலமுறநீமுன மருடரமேவிய தமியேனோ,

அகிலசராசரமுழுமையுமேதரு மரிமருகாநனிமிடியாலே,

தருங்கராடிய கரகமலாவெழு தரணியுமாள்தரு வ்ளியோனே,
சதமகனேயென நரர்களையேபுகழ் தமியனிமேதினி யலேவேனே,
மருவறுதூயவ ரிதயமதாமரை மலர்தனிலேயுறை முருகோனே,
மதுரையிலேபல திருவிளையாடல்செய் மதியணி வேணிய னருள்சேயே,
செருமுகமேவரு மசுரரைநாய்நரி தினவிலேவேல் விடு குமரேசா,
செலேநிகர்சோலைகண் மிகுவளமாய்வளர் சிறுமருதூரமர் பெருமாளே. (உக)

தழிப்பு.

தாத்ததத்தன தந்ததானன தாத்ததத்தன தந்ததானன
தாத்ததத்தன தந்ததானன தனதானா.

ஏற்றவர்க்கிட லின்றியேகொடு மாற்றமிக்குளை வன்கணாளரை யேத்திநற்கவி நின்றுபாடியு மிடியாலே
ஏக்கமுற்றுடல் கன்றியேதுயர் மீக்கொளப்பசி கொண்டுநாடொறு மேர்க்கவிட்டனை யென்றனல்வரு குறைவேதோ,
சிற்றமுற்றெதிர்வந்தகாலனை வீட்டிநற்றவ நின்றசிர்மய தீக்ஷணப்புதல்வன்றனேர்வரு பவர்சேயே,
தேற்றமிக்குள சிந்தையார்பலர் போற்றநிற்சர ணென்றனீண்முடி சேர்த்திநற்பத மென்றுநீதரல் பெறுவேனே,

ஆற்றலுற்றம ரண்டவாணனை மாட்டிமற்பொரு கின்றசூரனை ஆர்த்தெற்றிட வன்றுகோறிய நெடு வேலா,

ஆக்கநற்கொடி யொன்றுமார்பினை லிர்த்தவர்க்கரு ள்சிங்கமானவ ளுய்ச்சிமெச்சிடு மைந்தனுனவன் மரு கோனே,

தாற்றுபொற்கமு கங்கொள்சோலையின் வாட்டமற் றழகொன்றுறாய்மயில் தாத்ததத்திமி யென்றுசிர்நட மிகவாட,

தாவிடிகக்கொடை தங்குமேன்மைய ரேற்றமிக்க மர்கண்டதேவிகொள் தாட்டுணைக்கமலங்கொண்மேவிய பெருமாளே. (௯0)

## குழிப்பு.

தனனதந்தன தந்ததானன தனனதந்தன தந்ததானன
தனனதந்தன தந்ததானன தனதான.

உலகளந்திட வன்றுமாவலி யிடமிரந்தவனன்பர் தோமக லுளமுவந்திட வந்தசிரருண் முகிலாளே,

ளுபயவண்சிறை துன்றியேர்பெறு கலுழனின்மிட றங்குமாதவ னுரலணைந்திடநின்றகோவலன் மருகோ னே,

கலகலென்றொலி மிஞ்சுநூபுர மொடுதிகழ்ந்திடு த ண்டையாரிரு கழலைநம்பினவென்றனல்வரு குறைவே தோ,

கறையில்வெங்கலி கொண்டுதீயவர் மகிழநின்றுட ல் கன்றியேபல கவிபுனைந்திட நன்றதோ பொருடரு வாயே,

சலசனன்று மயங்கியேபிறை புகவெகுண்டிடு கந்தனேமிகு தயைபொருந்திய சுந்தரபால வரையோனே,
சைலமங்கை புணர்ந்தபாதிய ரிதழியம்புலி கொண்டவேணியர் தனியரொன்று மழிந்திடாதவ ரருள்சேயே,
அலகில்சநக முழங்குமோதையு மிழிவிகந்தவியங்களோதையு மலைபொருந்தியசிந்தியோடிக லொலிமேலி,
யமருபொங்கு மடந்தைமார்கட னெறியினின்றிடு செம்பொன்மாரியி லருள்விளங்கு குழந்தையாகிய பெருமாளே, (ருக)

தந்ததானன தந்ததானன
தந்ததானன தனதானா.

அண்டம்யாவையு முண்டமாயவ னந்தமாதியின் முதலானோ,
னன்றுவேள்வியில் வந்ததாடகை யங்குமாரனை முனிவோனும்,
விண்டமேலவா நெஞ்சமார்தரு விந்தைசேரரி மருகோனே,
விஞ்சநீமிடி கொண்டியான்மிக விந்தமாநில முழல்வேனோ,
சண்டன்வியவெ குண்டதாடிகழ் சம்புவானவ னருள்சேயே,
சந்தமால்வரை தங்குமாமுனி சங்கைதீருயர் குருநாதா,
கொண்டனேர்குழல் தந்திசோதரி கும்பவேர்முலை புணர்வோனே,
கொன்றைசூடியர் செம்பொன்மாரிய குண்டராவிகொள் பெருமாளே. (ரு௨)

## தழிப்பு.

தந்ததந்தன தந்ததானன தந்ததந்தன தந்ததானன
தந்ததந்தன தந்ததானன தனதான.

கங்கைமங்கைவி ளங்குசிர்சடி லங்கொளங்கிரி னங்கணிரு கந்தரந்திகழ் சண்டமேர்மறை புகல்வோனே
கஞ்சனஞ்சவெ குண்டபாலக வன்பர்சிங்கைநபு குந்துவாழ்குளிர் கந்தமிஞ்சுக டம்புமேவிய புயவீரா,
அங்கைகொண்டிடு துங்கவேலவை வென்றுவந்துனை நம்பியேதொழு மண்டர்தங்களை யன்றுவாழ்வுற நினைவோனே,
யண்டநந்திறு மெண்டிசாமுக நின்றகுன்றுக வின்றுபேரிறு மன்பனென்றெனை யெங்குமேசொல வருள்வாயே,
சங்கைவென்றெழி றங்குசீரிடர் கெண்டையென்று விளங்குகூர்விழி சந்தனங்கள பங்கொளோர்முலை யலர்மாதே,
தங்குநெஞ்சினர் சங்கமோடொளி யென்றுமென்றுணை செங்கைநேயியர் தஞ்சமென்றவர் பங்கில்வாழ்பவர் மருகோனே,
பங்கயங்கள லர்ந்தவாவியி னங்கினங்கண்மு ழுங்கியேதரு பண்புகொண்டில கின்றமாமணி நிலவாலே,
பண்டயங்குயர் வண்டுசேர்குழ றங்களன்றுமகிழ்ந்துவாயவிழ் பங்கமின்றிய கண்டதேவிசொள் பெருமாளே. (௩௩)

## தழிப்பு.

தானதந்ததான தானதந்ததான
தானதந்ததான தனதான.

ஆலமுண்டவாயர் காதிலன்றுமேன்மை யானமந்த்ரமோது குருநாதா,

ஆகமங்கள்வேத மியாவினுந்தனுறை வாதியென்ற்
றாய முருகோனே,

காலனெர்தநாளு மேவியென்றனுவி காணவந்தி
டாத வகைநாடிக்,

காவல்கொண்டுநிமை யாவுமொன்றிடாது காதல்
கொண்டெனோரில் வருவாயே,

வேலமைந்தகோல வேனமங்கைதோயும் வீரமி
ஞ்சதோள மயிலோனே,

வேதனஞ்சபால நாலுமங்கைமேய வேழமொன்றி
னேறி மிகல்வோனே,

சிலநந்தமோர்வி லாழிதங்குதோளர் சிர்மிகுந்தமா
யன் மருகோனே,

தோமிதங்குலாவு மோர்கொள்செம்பொன்மாரி சே
ருமெய்ந்தையான பெருமானே. (௩௪)

## குழிப்பு.

தந்ததன்னன தந்ததானன தந்ததன்னன தந்ததானன
தந்ததன்னன தந்ததானன தனதானா.

தஞ்சமென்னவ ணங்குதேவரை யஞ்சலென்ன
மொழிந்தருணவெல் தண்டகண்ணிய வன்பர்நோய்
கெட முனிவோனே,

சம்புமுன்வரி லங்குமாமறை யன்றுசொன்னகு
ழந்தையேமலர் தங்குமன்னமி வர்ந்ததேவனை முனி
வோனே,

வஞ்சமன்னிய சிந்தைமாதர்க ளன்பைநண்ணிமு
யங்கிநோய்கொள மங்கியெண்ணறு துன்பமோடிகல் மி
டியாலே,

வண்டர்தங்களையண்ணலேயென நின்றுநன்னய மென்றுமேசொலு மன்பனின்னலழுந்திடாதருள் புரிவாயே,

கஞ்சமின்னை மணந்தமாயவ ரன்றுகன்னனு கந்தவேதியர் கந்தமன்னிய வண்டுழாயினர் நிதமாரூர்,

கங்குலன்னநி றங்கொடாடகை பொன்றமின்னிவி லங்குகோல்விடு கம்பர்பன்னிய துங்கராகவர் மருகோனே,

மஞ்ஞர்டென்னையும் விஞ்சபூகம ரம்பைகன்னல்க ளெங்குமேவிவ ளங்கணன்னிய கண்டதேவியி லுறைவோனே,

வண்டினன்னிரை கொண்டகார்குழ றந்திசோதரி வன்னமார்குற மங்கைபன்னல மொன்றுசீரிய பெருமாளே. (௩௫)

## குழிப்பு.

தானதானன தந்ததானன தானதானன தந்ததானன
தானதானன தந்ததானன தனதான.

வானநாடுறை யிந்திராதியர் சோகமேபெற வென்றுதீமைசெய் மாவையேகெட வன்றுகோறிய நெடுவேலா,

வாதுபேசிய குண்டர்யாவரும் வீயவேசிறுமைந்தனைவ வாசமேவியகிம்பமாலையு மணிவோனே,

நானவார்குழ னந்தைநேர்மிடர் பூவைசீர்கிளி கண்டுபோன்மொழி நாகமேபுரை கின்றவேர்முலை யவர்மேலே,

நாளுமாசைபு ரிந்துநோய்கொடு வீதலேபுரிகின்ற பேர்மனை நாடியேமிடி கொண்டிடாதருட் டருவாயே,

கானமேகுதி யென்றுகேகயன் மாறுகூறிய வன்
றுபோகிய காரிலாமன மொன்றிராகவன் மருகோனே,
காலன்விழுவு தைந்துமீன்கடை யூரினுர்சிறு மைந்
தன்மேல்மிகு காதலேகொடு வந்தநீறணி பவர்சேயே,
தேனவாமலர் பொங்குசோலையின் மாதரார்கண்
முருந்தையேநிகர் நிலாதொளிர் தந்தமேபுனை தள
வாலே,
சீர்குலாவிய செம்பொன்மாரிமி லேகலாபமி கண்டி
யேறிய சேயனேயுயர்ந்தந்தருகிய பெருமாளே. (௩௯)

கண்டதேவி முருகர் வண்ணச்சந்தமாலை

முற்றிற்று.

61118

---

நூற்பயன்.

---

அண்டர்கள்வணங்குஞ்செம்பொன் மாறியிலயில்வே
லாற்குத்
தண்டமிழ்ச்சவையாற்சொன்ன வணச்சந்தமாலைக
ற்றோர்
சண்டன்வெங் கலிக்கஞ்சாமற் றாரணி யொருகோ
லோச்சிக்
கண்டனமொழித்தெய்வானை கணவன்றாள் பணிந்
துய்வாரே.

வேலுமயிலுந்துணை

---